පැරණි නිර්දේශය/பழைய பாடத்திட்டம்/Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

51 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

නාට්‍ය හා රංග කලාව I, II
நாடகமும் அரங்கியலும் I, II
Drama and Theatre I, II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

## நாடகமும் அரங்கியலும் I

**கவனிக்க :**

(i) **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.

(ii) **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.

(iii) **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**

(iv) அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, பின்பற்றுக.

**1.** நடிப்பின்போது குரல்வழிச் சித்திரிப்பு என்பது,
(1) உடல் உறுப்புகளால் வெளிப்படுத்தப்படுவதாகும்.
(2) முகபாவங்களால் உணர்வுகள் வெளிப்படுத்தப்படுவதாகும்.
(3) சொற்களால் அல்லது குரலால் வெளிப்படுத்தப்படுவதாகும்.
(4) வேட உடை, ஒப்பனைகளால் வெளிப்படுத்தப்படுவதாகும்.

**2.** ஓவியமும் கட்டடக் கலையும்
(1) கட்புலக் கலைகளாகும்.
(2) செவிப்புலக் கலைகளாகும்.
(3) கட்புல-செவிப்புலக் கலைகளாகும்.
(4) ஆற்றுகைக் கலைகளாகும்.

**3.** கதை ஒன்றிற்கும் நாடக ஆற்றுகை ஒன்றிற்கும் இடையிலான பிரதான ஒருமைப்பாடு
(1) வாசிக்கப்படுதல்
(2) கூட்டாக இரசிக்கப்படுதல்
(3) பாத்திரங்கள் காணப்படுதல்
(4) நால்வகைச் சித்திரிப்புக்களைக் கொண்டிருத்தல்

**4.** அரங்கில் செவிப்புல ரீதியான தாக்கத்தை, பார்ப்போருக்கு ஏற்படுத்தும் துணைக் கலை,
(1) அரங்க ஒளியூட்டுகை ஆகும்.
(2) அரங்கக் காட்சி விதானிப்பு ஆகும்.
(3) இசை விதானிப்பு ஆகும்.
(4) வேட உடை, வேடப் புனைவு ஆகியனவாகும்.

**5.** 'விழிப்பு' நாடகம் ஒரு முழுமையான,
(1) யதார்த்த மோடி நாடகமாகும்.
(2) நிருத்திய நாடகமாகும்.
(3) அபத்த மோடி நாடகமாகும்.
(4) கலப்பு மோடி நாடகமாகும்.

**6.** 'விழிப்பு' நாடகத்தில் பேசப்படும் பிரதான விடயம் யாது ?
(1) அன்பின் நிமித்தம் பிள்ளைகளை வற்புறுத்தும் பெற்றோர்
(2) மீனவர்களின் பிரச்சினை
(3) வேலையில்லாத இளைஞர்கள்
(4) மனித முயற்சியால் எதையும் சாதிக்கலாம் என்பது

**7.** பின்வருவனவற்றுள் புதிதளித்தல் பற்றிய **பொருத்தமற்ற** கூற்று
(1) முன்னாயத்தமின்றி உடனடியாக ஒரு செயலை/சூழமைவைச் சித்திரிப்பது ஆகும்.
(2) நடிப்புத் திறன்களை வளர்ப்பதற்குச் சிறந்த நுட்பமாகும்.
(3) பிரதிபண்ணி நடிக்கும் ஆற்றலை வளர்த்துச் செல்வது ஆகும்.
(4) யாதேனுமொன்றைப் புதிதாகப் படைப்பதற்கான ஆற்றல் விருத்தியடைதல் ஆகும்.

[பக். 2 ஐப் பார்க்க

**8.** நிருத்த, நிருத்திய, நாட்டிய என்பவற்றுள் நிருத்த என்பதற்கு விளக்கம் தரும் கூற்று
(1) அதில் அர்த்தம் அல்லது பாவம் புலப்படும். (2) அது யாதேனும் ஒரு கருத்தை வெளிப்படுத்தும்.
(3) அது ஒரு தாள நடனமாகும். (4) அதில் நால்வகை அபிநயமும் பயன்படுத்தப்படும்.

**9.** "அங்க அசைவுகளால் வெளிப்படுத்தப்படும் கருத்துக்களை முகத்தின் உணர்வுகளாலும் எடுத்துக்காட்டலாம்." இக்கூற்றில் இடம்பெறும் சித்திரிப்புகள் முறையே,
(1) உடல்வழி, குரல்வழி, காண்பியவழி என்பனவாகும்.
(2) உடல்வழி, குரல்வழி, உணர்ச்சிவழி என்பனவாகும்.
(3) குரல்வழி உடல்வழி, காண்பியவழி என்பனவாகும்.
(4) உடல்வழி, காண்பியவழி, குரல்வழி என்பனவாகும்.

**10.** "ஆள்மேற்கொள்ளல் அக, புற என இரண்டு வகைப்படுமென்பர்." பின்வருவனவற்றுள் அகநிலை ஆள்மேற்கொள்ளலில் **அடங்காதது**
(1) உடலசைவுகள் (2) முகபாவங்கள் (3) குரல் வெளிப்பாடுகள் (4) வேட உடைகள்

**11.** குளுத்திச் சடங்கு பெரும்பாலும்,
(1) சிவன் கோயில்களில் நடைபெறும். (2) முருகன் கோயில்களில் நடைபெறும்.
(3) கண்ணகி அம்மன் கோயில்களில் நடைபெறும். (4) ஐயனார் கோயில்களில் நடைபெறும்.

**12.** மன்மதனைச் சிவன் எரித்த கதையை கருவளச் சடங்காக நிகழ்த்திக் காட்டும் ஆற்றுகை வடிவம்
(1) அர்ச்சுனன் தபசு (2) காமன் கூத்து (3) பொன்னர் சங்கர் (4) லாவணி ஆட்டம்

**13.** பின்வருவனவற்றுள் உடக்குபாஸ் பற்றிய **தவறான** கூற்று
(1) யேசுவின் பாடுகள், துன்பங்கள் நிகழ்த்திக் காட்டப்படும்.
(2) ஆற்றுகைக்காகப் பாவைகள் மட்டுமே பயன்படுத்தப்படும்.
(3) கத்தோலிக்கர் வாழும் பிரதேசங்களில் நடித்துக் காட்டப்படும்.
(4) தேவாலய வீதிகளில் நடைபெறும்.

**14.** பின்வரும் கூத்துக்களில் வட மோடிப் பாங்கில் அமைந்தது
(1) அலங்காரரூபன் நாடகம் (2) காத்தவராயன் நாடகம்
(3) எஸ்தாக்கியார் நாடகம் (4) இராம நாடகம்

**15.** பின்வரும் அரங்கவெளிகளுள் ஒருபக்கம் பார்ப்போரைக் கொண்ட அரங்கவெளி
(1) அர்ச்சுனன் தபசு அரங்கவெளி (2) களரி அரங்கவெளி
(3) கரலிய அரங்கவெளி (4) படச்சட்ட அரங்கவெளி

**16.** 'கோலம' நாடகம் தொடங்குவதற்கு முன்னதாக நடித்துக் காட்டப்படும் 'கோலம',
(1) பணிவுட கோலம எனப்படும். (2) முதலி கோலம எனப்படும்.
(3) அணபெர கோலம எனப்படும். (4) கோவா கோலம எனப்படும்.

**17.** பின்வருவனவற்றுள் 'கோலம' நாடகம் பற்றிய **தவறான** கூற்று
(1) தாழ்நாட்டுப் பிரதேசங்களில் ஆடப்படுவதாகும்.
(2) இதன் சிறப்பியல்பு சமூகத்தில் காணப்படும் குறைபாடுகளை எள்ளிநகையாடுதலாகும்.
(3) சுதேச நாட்டார் பாடல்களை உள்ளடக்கியுள்ளது.
(4) பத்தினி வழிபாட்டை அடிப்படையாகக் கொண்டது.

**18.** சிங்கள 'சொக்கரி' நாடகம் ஆடப் பெறுவதன் நோக்கம் **அல்லாதது**
(1) பயிர் விளைச்சல் (2) நோய் தீர்த்தல் (3) செழிப்பு (4) சௌபாக்கியம்

**19.** சிங்கள நாடக உலகில், சிறுவர் நாடகவியலாளர் என அழைக்கப்படுபவர்
(1) எதிரிவீர சரத்சந்திர (2) தம்மயாகொட
(3) சோமலதா சுபசிங்க (4) தர்மசிறி பண்டாரநாயக்க

**20.** பின்வருவனவற்றுள் பரப்பொளி பற்றிய சரியான கூற்று எது ?
(1) புள்ளிக் குவியலுடைய விளக்கு எனக் கருதப்படும்.
(2) இலக்குக்கு ஒளி பாய்ச்சுவதற்காகப் பயன்படுத்தப்படும்.
(3) பரவிச்செல்லும் விளக்கு எனக் கருதப்படும்.
(4) பாத்திர அசைவைக் காட்டுவதற்குப் பயன்படுத்தப்படும் ஒளிவிளக்காகும்.

[பக். 3 ஐப் பார்க்க

**21.** வேலு சரவணன், ம. சண்முகலிங்கம், மாவை நித்தியானந்தன் ஆகியோரால் எழுதப்பெற்ற சிறுவர் நாடகங்களை முறையே கொண்ட தெரிவு யாது?
(1) தேவலோக யானை, ஒற்றுமையின் சின்னம், அரசனின் புத்தாடை
(2) குட்டியானைக்குக் கொம்பு முளைத்தது, சட்டியும் குட்டியும், தப்பி வந்த தாடி ஆடு
(3) பிள்ளை அழுத கண்ணீர், பண்பும் பயனும், நாய்க்குட்டி ஊர்வலம்
(4) ஆச்சி சுட்ட வடை, நரிமேளம், வேடனை உச்சிய வெள்ளைப் புறாக்கள்

**22.** நிறமற்ற வெள்ளை ஒளியை முக்கோண ஆடி வழியே அடிப்படை நிறங்களாகப் பிரிக்கவோ அல்லது பரவவோ செய்யலாம். ஒளியில் பயன்படும் அடிப்படை நிறங்கள் யாவை ?
(1) மஞ்சள், சிவப்பு, பச்சை (2) பச்சை, சிவப்பு, மஞ்சள்
(3) நீலம், சிவப்பு, பச்சை (4) நீலம், சிவப்பு, மஞ்சள்

**23.** பின்வருவனவற்றுள் சிறுவர் நாடகத்தின் பண்பு **அல்லாதது**
(1) பிள்ளைகளின் விருப்பிற்கேற்ப தயாரிக்கப்படும்.
(2) மூன்று தொடக்கம் பத்து வயதிற்குட்பட்ட பிள்ளைகளுக்காக அவர்களின் உள முதிர்ச்சிக்கேற்ப தயாரிக்கப்படும்.
(3) பார்ப்போராக சிறுவர்களும் அவர்களின் பெற்றோரும் காணப்படுவர்.
(4) வசனங்கள் மாத்திரமே உரையாடலுக்குப் பயன்படுத்தப்படும்.

**24.** பின்வருவனவற்றுள் நெறியாளர் பற்றிய **தவறான** கூற்று
(1) நாடகத்தை நெறியாள்கை செய்பவர்.
(2) நாடக எழுத்துருவை வியாக்கியானம் செய்பவர்.
(3) பாத்திரங்களுக்குப் பொருத்தமான நடிகரைத் தேர்வு செய்பவர்.
(4) நடிகர்களுக்கான ஊதியத்தை வழங்குபவர்.

**25.** பின்வருவனவற்றுள் இசை நாடகம் என்பதைக் குறிப்பதற்குப் **பயன்படுத்தப்படாதது**
(1) ஸ்பெசல் நாடகம் (2) பார்ஸி நாடகம் (3) டிறாமா மோடி (4) வாசகப்பா

**26.** பின்வருவனவற்றுள் இசை நாடகம் பற்றிய **தவறான** கூற்று
(1) சங்கரதாஸ் சுவாமிகளால் செழுமையாக்கப்பட்டது.
(2) 18ஆம் நூற்றாண்டின் இறுதியில் தமிழ்நாட்டில் அறிமுகமானது.
(3) முற்றிலும் சமய ஐதீகக் கதைகளை உள்ளடக்கியது.
(4) இதன் வருகையின் பின்னரே நாடகத்தைத் தொழில்முறையாக மேற்கொள்ளும் மரபு உருவானது.

**27.** க. கணபதிப்பிள்ளை அவர்களின் நாடகங்களில் காணப்படும் இயல்புகளில் ஒன்று
(1) பாடலும் ஆடலும் இணைந்த அளிக்கை முறையைக் கொண்டிருத்தல்
(2) வர்ணம் தீட்டப்பட்ட காட்சித் திரைகள் மற்றும் பொருள்களின் பயன்பாடு காணப்படல்
(3) இயல்பான பேச்சு மொழியைப் பேசி நடிக்கும் முறையைக் கொண்டிருத்தல்
(4) மோடிமைப் பாணியில் அமைந்த நாடக முறையாகக் காணப்படல்

**28.** சு. வித்தியானந்தன் அவர்களால் புத்தாக்கம் செய்யப்பட்ட நொண்டி நாடகம் எவ்வகையைச் சார்ந்தது ?
(1) வட மோடி (2) தென் மோடி (3) வடபாங்கு (4) தென்பாங்கு

**29.** இளைய பத்மநாதன் அவர்களால் கூத்தின் வடிவத்தை அடிப்படையாகக் கொண்டு புதிய சமகால கதைக் கருவை முன்வைத்து எழுதப்பட்ட நாடகம்
(1) சங்காரம் (2) கந்தன் கருணை
(3) பொறுத்தது போதும் (4) நம்மைப் பிடித்த பிசாசுகள்

**30.** 1970 இல் ஆரம்பிக்கப்பட்ட நடிகர் ஒன்றியம் எந்த இடத்தை மையமாகக் கொண்டிருந்தது ?
(1) யாழ்ப்பாணத்தை (2) மட்டக்களப்பை (3) கொழும்பை (4) மலையகத்தை

**31.** 1976 களில் ஆசிரியர்களுக்கு அரங்கக் கல்வியில் நாடக டிப்ளோமா பயிற்சி வழங்கிய பல்கலைக்கழகம் எது ?
(1) கிழக்குப் பல்கலைக்கழகம் (2) கொழும்புப் பல்கலைக்கழகம்
(3) பேராதனைப் பல்கலைக்கழகம் (4) யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்

**32.** 'கூடி விளையாடு பாப்பா' எனும் சிறுவர் நாடகத்தை முதலில் தயாரித்த அரங்க நிறுவனம்
(1) நடிகர் ஒன்றியம் (2) நாடக அரங்கக் கல்லூரி
(3) அவைக்காற்று கலைக்கழகம் (4) அரங்க செயற்பாட்டுக் குழு

**33.** பின்வருவனவற்றுள் எதிரிவீர சரச்சந்திர அவர்களால் **தயாரிக்கப்படாத** சிங்கள நாடகம்
(1) நரிபேனா (2) மனமே (3) பபாவதீ (4) சிங்கபாகு

[பக். 4 ஐப் பார்க்க

**34.** பின்வருவனவற்றுள் 'நாடகம்' பற்றிய **தவறான** கூற்று
(1) 'கரலிய' எனும் அரைவட்ட அரங்கில் ஆடப்படும்.
(2) மூன்று தொடக்கம் ஏழு நாட்கள் வரை நடிக்கப்படும்.
(3) பெண் பாத்திரங்கள் பெண்களாலேயே நடிக்கப்படும்.
(4) இதன் நெறியாளர் 'பொத்தே குரு' என அழைக்கப்படுவார்.

**35.** பின்வரும் கூற்றுகளைக் கருதுக.
A - முதலாவது சிங்கள நூர்த்தி 'ரொலினா' ஆகும்.
B - ஜோன் டி சில்வா, சாள்ஸ் டயஸ் போன்றோர் இந்நாடகங்களை எழுதினர்.
C - இவற்றில் தென்னிந்திய கர்நாடக இசை பயன்படுத்தப்படும்.
D - டவர் மண்டபத்திலேயே இந்நாடகங்கள் மேடையிடப்பட்டன.

இவற்றுள் நூர்த்தி பற்றிய சரியான கூற்றுகள் அடங்கிய தொகுதி
(1) A, B, C (2) A, B, D (3) A, C, D (4) B, C, D

**36.** பின்வரும் உரையாடலை வாசித்து அதன் கீழுள்ள வினாவுக்கு விடை தருக.
A : மாமா (என்றபடி கார்த்திகேசுவுக்குக் கிட்டப்போய் விம்முகிறாள்.)
B : (கோபமாக) இப்ப ஏன் அவனைத் தொட்டனி ?
C : ஆர் தொட்டது ? கண்டனீங்களோ ?
B - தொடாமல் இப்ப என்ன கொசுவோ கலைச்சனி ?

மேலே குறிப்பிடப்பட்டுள்ள, 'விழிப்பு' நாடகத்தில் வரும் A, B, C ஆகிய பாத்திரங்கள் முறையே,
(1) கார்த்திகேசு, செல்வி, சந்திரன் (2) செல்வி, சிவக்கொழுந்து, சந்திரன்
(3) செல்வி, சந்திரன், கார்த்திகேசு (4) செல்வி, கார்த்திகேசு, சந்திரன்

**37.** நாடகத்தில் மேடை முகாமையாளர் என்பவர்
(1) நாடகத்தை நெறியாள்கை செய்பவர் (2) நாடகத்தைத் தயாரிப்பவர்
(3) காட்சிகளை ஒழுங்குபடுத்துபவர் (4) விற்பனைச் சீட்டுக்களை விற்பவர்

● பின்வரும் படங்களை அடிப்படையாகக் கொண்டு **38** தொடக்கம் **40** வரையான வினாக்களுக்கு விடையளிக்குக.


A


B


C

**38.** படம் A இல் காட்டப்பட்டுள்ள வேட முகம் குறிக்கும் நாடக மரபு யாது ?
(1) கோலம (2) சொக்கரி (3) நாடகம (4) நூர்த்தி

**39.** படம் B இல் காட்டப்பட்டுள்ள பாத்திரத்தை ஏற்று நடித்துப் புகழ்பெற்ற நாடகக் கலைஞர் யார் ?
(1) எஸ். ரி. அரசு (2) பிரான்சிஸ் ஜெனம்
(3) கலையரசு சொர்ணலிங்கம் (4) கலைச்செல்வன்

**40.** படம் C இல் காட்டப்பட்டுள்ள அரங்கில்,
(1) நவீன நாடகங்கள் நடித்துக் காட்டப்படும்.
(2) இசை நாடகங்கள் நடித்துக் காட்டப்படும்.
(3) கூத்துகள் நிகழ்த்திக் காட்டப்படும்.
(4) விலாச நாடகங்கள் நடித்துக் காட்டப்படும்.

* *

[பக். 5 ஐப் பார்க்க

පැරණි නිර්දේශය/பழைய பாடத்திட்டம்/Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

51 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

නාට්‍ය හා රංග කලාව I, II
நாடகமும் அரங்கியலும் I, II
Drama and Theatre I, II

## நாடகமும் அரங்கியலும் II

※ **முதலாம்** வினாவையும் வேறு **நான்கு** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு **மாத்திரம்** விடை எழுதுக.

**1.** பின்வரும் வினாக்களுக்குச் சுருக்கமான விடை எழுதுக.

(i) தமிழ் பாரம்பரியத்தில் நாடகத்தைக் குறிக்கும் சொல் யாது ? (01 புள்ளி)

(ii) இந்திய மரபில் 'தெருக்கூத்து' ஆடப்படும் பிரதேசம் யாது ? (01 புள்ளி)

(iii) இலங்கையில் 'அரங்கம்' எனும் சிற்றேட்டை வெளியிட்ட நிறுவனம் யாது ? (01 புள்ளி)

(iv) மலையகத்தில் காமன் கூத்து எந்த மாதத்தில் ஆடப்படுகிறது ? (01 புள்ளி)

(v) பாண்டவர் வனவாசம் எனும் சடங்கு நிலை ஆட்டம் நிகழ்த்தப்படும் பிரதேசம் எது ? (01 புள்ளி)

(vi) 'பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் நாடகம்' எனும் அரங்க ஆய்வு நூலின் ஆசிரியர் யார் ? (01 புள்ளி)

(vii) க. கணபதிப்பிள்ளை அவர்களால் தழுவலாக்கம் செய்யப்பட்ட நாடகத்தின் பெயர் யாது ? (01 புள்ளி)

(viii) சிங்களவர் மத்தியில் ஆடப்படும் 'ரட்டயக்கும' எனும் சடங்காட்டம் நிகழ்த்தப்படுவதன் நோக்கம் யாது ? (01 புள்ளி)

(ix) 'ஊம நடிப்பு' என்றால் என்ன ? (02 புள்ளிகள்)

(x) இலக்கியத்திற்கும் மேடை நாடகத்திற்கும் இடையிலான வேறுபாடுகள் **இரண்டு** தருக. (02 புள்ளிகள்)

**2.** "பல்வேறு பயிற்சிகளைப் பெற்றுக்கொண்டால் நடிகரின் சித்திரிப்பு முறைமை முழுமை பெறும்."

(i) ஒரு நடிகர் பெற்றுக்கொள்ள வேண்டிய பிரதான பயிற்சிகள் யாவை ? (03 புள்ளிகள்)

(ii) மேலே (i) இல் குறிப்பிடப்பட்ட பயிற்சிகள் ஒவ்வொன்றினதும் பயன்பாடுகள் யாவையெனச் சுருக்கமாக விளக்குக. (09 புள்ளிகள்)

**3.** பின்வரும் சடங்காட்ட மரபுகளை அவற்றின் நோக்கம், பாத்திரங்கள், பார்ப்போர் போன்ற விடயங்களைக் கவனத்திற் கொண்டு விளக்குக.

(i) குளுத்திச் சடங்கு (04 புள்ளிகள்)

(ii) சூரன்போர் (04 புள்ளிகள்)

(iii) தகட்ட சன்னிய (04 புள்ளிகள்)

**4.** "அரங்கவெளி என்பது நாடகம் நிகழ்த்தப்படும் இடம், பார்ப்போர் இருக்கும் இடம் அனைத்தையும் உள்ளடக்கியதாகும்."

(i) பின்வரும் அரங்கவெளிகளில் நிகழ்த்தப்படும அரங்க வடிவங்களைப் பட்டியற்படுத்துக.

(அ) களரி
(ஆ) கரலிய
(இ) தானயம்பல
(ஈ) பொட்டல்வெளி
(உ) களத்துமேடு (05 புள்ளிகள்)

(ii) (அ) தெருவெளி அரங்கு ஒன்று ஆரம்பித்து முடிவுறும் வரையிலான கட்டங்களை ஒழுங்குமுறையில் குறிப்பிடுக. (02 புள்ளிகள்)

(ஆ) இவ்வரங்கில் பேசப்படும் விடயம், பயன்படுத்தப்படும் காண்பியங்கள், வேட உடைகள் இசைவாத்தியங்கள் ஆகியன எவ்வாறு அமைந்திருக்கும் என்பதைச் சுருக்கமாக விளக்குக. (05 புள்ளிகள்)

[பக். 6 ஐப் பார்க்க

**5.** பின்வரும் அரங்க நிறுவனங்கள் ஒவ்வொன்றும் இலங்கைத் தமிழ் நாடக வளர்ச்சிக்கு ஆற்றிய பங்களிப்புகள் பற்றி விளக்குக.

(i) நடிகர் ஒன்றியம் (04 புள்ளிகள்)

(ii) நாடக அரங்கக் கல்லூரி (04 புள்ளிகள்)

(iii) இலங்கை அவைக்காற்று கலைக்கழகம் (04 புள்ளிகள்)

**6.** (i) **எந்தையும் தாயும்** நாடகம் எந்த மோடி வகையைச் சார்ந்தது ? (02 புள்ளிகள்)

(ii) நாடகாசிரியர், இந்நாடகத்தின் கருவாக எதனைக் குறிப்பிடுகிறார் ? (03 புள்ளிகள்)

(iii) இந்நாடகத்தில் இடம்பெறும் பாத்திரங்கள் யாவை ? (03 புள்ளிகள்)

(iv) மேலே (iii) இல் குறிப்பிடப்பட்ட ஏதேனும் ஒரு பாத்திரத்தின் இயல்புகள் **நான்கைக்** குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

**7.** (i) நாடகமும் அரங்கியலும் கற்கும் மாணவர்கள் எதிர்நோக்கும் பிரச்சினைகள் **மூன்றினைக்** குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) நாடகமும் அரங்கியலும் கற்பிக்கும் ஆசிரியர்கள் எதிர்நோக்கும் பிரச்சினைகள் **மூன்றினைத்** தருக. (03 புள்ளிகள்)

(iii) பிரச்சினைகளை எதிர்கொண்டு நாடகமும் அரங்கியலும் பாடத்தை மேம்படுத்த மாணவர்களும் ஆசிரியர்களும் என்ன நடவடிக்கைகள் மேற்கொள்ளலாம் என்பதைச் சுருக்கமாக விளக்குக. (06 புள்ளிகள்)

* * *